# ஆத்திசூடி அமரும் தேவர் பார்சுவநாதர்

*டாக்டர் நா. கணேசன், ஹ்யூஸ்டன், அமெரிக்கா*

## தமிழில் பள்ளிக் கல்வியும், குழந்தைகள் பயிலும் ஆத்திசூடியும்:

*ஔவையார் என்ற பெயரில் தமிழ் இலக்கியங்களைச் செய்த பல புலவர்கள் நூற்றாண்டுதோறும் வாழ்ந்துள்ளனர். தமிழகத்தில் "பள்ளிக்" கல்வி தோன்றிய காலத்தில் "ஆத்திசூடி" என்ற ஆழம் பொதிந்த பாலபாடத்தை இயற்றிய ஔவையார் துதிக்கும் இறைவன் யார் என இங்கே பார்ப்போம். திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற அழியாப் புகழ்கொண்ட படைப்புகள் தோன்றிய காலத்தில் வாழ்ந்த ஔவைக் குரத்தியார் பள்ளிக் குழந்தைகள் தமிழ் கற்கத் தொடங்குவதற்காக இரத்தினச் சுருக்கமாக ஆத்திசூடி என்ற புதுவகை இலக்கியம் படைத்திருக்கிறார். குரத்தி என்றால் சைன தவப்பெண் என அர்த்தம். குரத்தியறை என்ற பெயரில் ஔவை கோயில் உள்ள மலை குமரி மாவட்டத்தில் உள்ளது.*

*இந்தியாவின் தேசிய மலர் தாமரை, தேசிய மரம் ஆலமரம் என்பதுபோல் தேசிய நூல் என்று கொண்டாடத்தக்க திருக்குறளைக் குறள்வெண்பா யாப்பு என்ற ஒன்றைப் புதிதாய் இரண்டடியில் உருவாக்கித் திருவள்ளுவர் எழுதினார். அதைவிடச் சுருக்கமாக ஒரே அடியில் ஆத்திசூடி வாக்கியங்களை ஔவையார் எழுதித் தந்து பள்ளிச் சிறுவர்களுக்குத் தமிழ் படிக்கத் தொடங்கி வைத்துள்ளார். அப்போதைய சமண, பௌத்த சமயங்களின் கால நிலையை அறிந்துகொள்வது தமிழ் வரலாற்றிலும், இந்தியாவின் கலைவரலாற்றிலும் மக்கள் மறந்துபோன ஓலையேடுகள் சிலவற்றை மீண்டும் அறிந்து உணர்வது போலாகும். ஔவையின் ஆத்திசூடி பின்னர் வழிநூல்களாக ஒரு பெரிய பிரபந்த வகையையே அளித்துள்ளது. சைவ ஔவையாரின் (12-ஆம் நூற்றாண்டு) கொன்றைவேந்தன் தொடங்கிப் பாரதியார், பாரதிதாசன், கவிஞர் சிற்பி என்று 20-ஆம் நூற்றாண்டுக் கவிஞர்கள் கூட புதிய ஆத்திசூடிகளைச் செய்துள்ளனர். திருவள்ளுவர் வாழ்ந்த நூற்றாண்டை அடுத்து ஒன்றிரண்டு நூற்றாண்டுகளில் வாழ்ந்தவராக ஆத்திசூடி அளித்த ஔவை என்னும் சமணப் பெண்மணி எனக் கொள்ளுதல் சாலப் பொருந்தும்.*

*வரலாற்றில் வெவ்வேறு நூற்றாண்டுகளில் வாழ்ந்த நான்கு ஔவையார்கள் தெரிகிறார்கள். ஆத்திசூடி ஔவை சங்ககாலத்தில் அதியமான் நெடுமான் அஞ்சியுடன் வாழ்ந்த ஔவையார்க்கு மூன்று அல்லது நான்கு நூற்றாண்டுகள் பிற்பட்டவர். அதாவது சிலம்பு, மணிமேகலை, நாலடியார் போன்ற சங்கம் மருவிய காலத்தின் சமண நீதி நூல்களும், காவியங்களும் தோன்றிய காலம். ஆனால் கொன்றைவேந்தன், மூதுரை, வாக்குண்டாம், நல்வழி, வினாயகர் அகவல் போன்ற நூல்கள் இயற்றிய சைவ சமயத்தவரான ஔவையாரோ ஆத்திசூடியைத் துதிக்கும் ஔவையாரைவிட ஆறேழு நூற்றாண்டுகள் சென்றபின் வாழ்ந்தவர் எனலாம். பந்தனந்தாதி, அசதிக்கோவை போன்றவை இயற்றிய ஔவை கடைசியாக வாழ்ந்தவர்.*

*சங்கம் மருவிய காலத்தில் தமிழில் சமணர்கள் தங்கிய "பள்ளி" என்ற சொல் கல்வி புகட்டும் இடங்களுக்குப் பொதுவான பெயர் ஆகிவிட்டது, பரவலாகக் கல்வியறிவைச் சமணரும், பௌத்தரும் தான் முதலில் வழங்க முற்பட்டனர். சங்க காலக் கல்வெட்டுகளைப் பார்த்தால் அவை அனேகமாக எல்லாமும் இந்த இரண்டு சமயத்தவர்கள் கொடுத்த கொடைகளாகத் தான் உள்ளன. சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி குழுத் தலைவராக வீற்றிருந்து அரிய பணி செய்த பேரா. ச. வையாபுரிப்பிள்ளை போன்றோர் தொல்காப்பியம், குறள், சிலம்பு போன்றவை இச் சமயத்தவர்களின் தமிழ்விருந்து என்று விரிவாக ஆய்ந்து எழுதியுளர்.*

*எண்ணும், எழுத்தும், நீதியும் தொடக்கப் பள்ளிகளில் கற்பிக்கச் சிறிய அரிய நூல்களைச் சமண ஆசிரியர்கள் படைத்துத் தந்தனர். அரிச்சுவடி, நெல்லிலக்கம், எண்ணிலக்கம், கணக்கதிகாரம், ஆத்திசூடி, கல்வியொழுக்கம், … என ஆரம்ப கால நூல்களும், சற்று மேல்வகுப்பு பயிலச் செல்பவர்களுக்கு கீழ்க்கணக்கு நூல்களில் சிறந்த நாலும், இரண்டும் என்று நாலடியாரையும், திருக்குறளையும் தமிழ்க்கல்விக்கு அடித்தளமாக அமைத்துள்ளனர். கணக்கதிகாரம் பௌத்தர், சமணர்களால் திண்ணைப் 'பள்ளி'களில் கணக்கு கற்பிக்க ஏற்பட்ட நூல். தொடக்கக் கல்வி நூல்களின் கடவுள் வாழ்த்து ஒப்பிட்டால் சமணத்தின் தமிழ்க்கல்விக் கொடை புரியும்.*

இலக்கம் - கடவுள் வாழ்த்து
முக்குடை அருகன் முதல்வனைப் போற்றிவாழ்
அக்கணம் இலக்கம் அறிந்திடலாமே

நெல்லிலக்கம் - கடவுள் வாழ்த்து
வல்மதி முக்குடை யான்மலர் அடிதொழ
நெல்லணி லக்கமென் நெஞ்சினில் வருமே

எண்சுவடி - கடவுள் வாழ்த்து
முத்தணிந்த முக்குடைக்கீழ் மூவா முதல்வனே
அத்தனே ஆதி அறவரசே சித்தனே
எண்ணூலி லாறைந்து வாயுமெனக் கருள்வாய்
இந்நூலை யானுணர்க வென்று

இதே மரபில் ஆத்திசூடி என்று யாவரும் அறிந்த இலக்கியத்தின் கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

ஆத்தி சூடி அமரும் தேவனை
ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே.

## ஔவையார் வழிபடும் ஆத்திசூடி யார்?

*பார்சுவநாத தீர்த்தங்கரர் ஒரு வரலாற்று நாயகர். வர்த்தமான மகாவீரருக்கு முன் வாழ்ந்தவர். நேமிநாதரை அடுத்துத் தோன்றியவர். கி.மு 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். சமணர்களின் 23-ஆவது தீர்த்தங்கரராகப் போற்றப்படுபவர். அரச குலத்தில் தோன்றிய பார்சுவநாதர் நூறு ஆண்டுகள் உயிர்வாழ்ந்தார். தம் வாழ்நாளில் 30 ஆண்டுகள் இல்லறத்தை மேற்கொண்டும், 70 ஆண்டுகள் துறவறத்தை மேற்கொண்டும் சிறப்புற்றார். உயிர்க்கொலை, சாதிப் பாகுபாடு ஆகியவற்றைக் கடுமையாக எதிர்த்தவர் அவர்.*

*போதி மர நிழலில் புத்தர் ஞானம் பெற்றதுபோல, பிண்டி என்னும் மலர்க்கொத்துக்கள் கொண்ட அசோக மரம் மகாவீரருக்கு ஞானமரம் என்பது போலவும் ஆத்தி (வடமொழியில் தாதகி என்பர்) மர நிழலில் 84 நாள்கள் கடுமையான தவஞ்செய்து உயர்ந்த ஞானம் அடைந்தவர் பார்சுவநாதர். புத்தரும், பார்சுவநாதரும் காசி அருகே மகத மண்டலத்திலே வாழ்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். ஔவைக் குரத்தியார் தாம் எழுதிய ஆத்திசூடி என்ற நூலின் கடவுள்வாழ்த்துப் பாடலில் ஆத்திமர நிழலில் அமர்ந்து ஞானம் பெற்ற பார்சுவநாதரையே குறிப்பிடுகின்றார். ஏனெனில் 'சூடுதல்' என்றால் 'அணிதல்' என்ற பொருள் மட்டுமின்றிச் சூழ்ந்து கவிந்திருத்தல் என்ற பொருளும் உண்டு. வானம் சூடிய உலகத்தைப் புறநானூறு 35-லும், பெரும்பாணாற்றுப்படை, நாலடியார் போன்ற பழைய இலக்கியங்களிலும் காண்கிறோம். வானம் சூடிய (= கவிந்த) வையம், கொண்டல் சூடிய மலை (ஐங்குறுநூறு) என்பது போலவே ஆத்தி சூடி அமரும் தேவன் என்கிறபோது ஆத்தி சூழ்ந்து, கவிகையாகக் குடைபிடிக்கும் நிழலில் அமரும் பார்சுவநாதர் என்பது பொருளாகும். தீர்த்தங்கரர்கள் வரலாறு கூறும் ஸ்ரீபுராணத்தில் தேவதாரு என்று பார்சுவநாதர் தவஞ்செய்யும் ஆத்திமரம் புகழப்படுகிறது. மேலும் சமணர்களின் பிரபஞ்சவியலில் பூமிக்கு மேலே உள்ள மத்தியலோகத்தைத் தாதகிலோகம் எனப்படுவதும் ஆத்திக்கு பார்சுவநாதரால் ஏற்பட்ட சிறப்பு எனலாம். தாதகிலோகம் நாவலந்தீவு உள்ள உலகத்தைவிடப் பெரிதாம்.*

*இந்தியாவின் 2000 ஆண்டுகால சிற்பங்களும் சித்திரங்களும் தாதகிவலயர் ஆக இருக்கும் ஆத்திசூடி தீர்த்தங்கரரைக் காட்டுகின்றன. புத்தர் அரசமரத்தடியில் அமர்ந்திருப்பதுபோல, பார்சுவர் ஆத்திமரத்தடியில் இருக்கிறார். சுமார் 1500 வருடப் பழமை வாய்ந்த ஆத்திசூடி தீர்த்தங்கரர் சிற்பம் ஒன்று கர்நாடகாவில் கிடைத்துள்ளது. தீர்த்தங்கரசாமிமேல் ஆத்தி தாவரம். அந்த அலங்காரத்தின் உச்சியில் ஒரே ஓர் அரவம். இந்த உச்சி நாகத்தால்தான் அந்த ஆத்திசூடித் தீர்த்தங்கரர் பார்சுவர் என அடையாளம் தெரிகின்றது.*




*படம் 1. ஆத்தி மரத்தின் அடியில் ஆத்திசூடி தீர்த்தங்கரர் (பீஜப்பூர், கர்நாடகா)*

*ஆத்திசூடி அமர்ந்த தேவன் இன்னோர் உதாரணம் பார்ப்போம். ஆத்தியின் கீழ் பார்சுவர் தவம் செய்யும்போது அசுரர்களின் மழை, இடியிலிருந்து காப்பாற்றத் தரணேந்திரன் என்னும் பாம்பு குடையாக அமைந்தது என்கிறது ஸ்ரீபுராணம். அப் பாம்பின் தலைகள் மேலே ஆத்திமரம் பொன்னாலான விளிம்புடன் காட்டப்படுகிறது. தீர்த்தங்கரரின் ஞான விருக்ஷம் ஆகையினால் பொன்னேபோல் போற்றுகின்றனர்.*




*படம் 2. ஆத்திசூடி பார்சுவநாதர் (குஜராத்)*



*படம் 3. ஆத்திசூடி தீர்த்தங்கரர் (கொற்றக்குடையின் கீழ் ஆத்திமரம்)*



*படம் 4. பாகல்வண்ணர் பார்சுவநாதர் (தாதகி மரக் கவிகையுடன்)*



*படம் 5. ஆத்திசூடி பார்சுவநாதர் (மிகப் பழைய சிற்பம்)*



*படம் 5. ஆத்திசூடி பார்சுவநாதர் (ஆத்தி சூடிய/கவிந்த கோலம்)*

*வீரசோழியம் தமிழில் அழிந்தவை போக இருக்கிற இரண்டே இரண்டு பௌத்த நூல்களில் ஒன்று. வடமொழி இலக்கணத்தைத் தமிழில் தருவது. அதில் எல்லா எடுத்துக்காட்டுப் பாட்டும் புத்தர், போதிசத்துவர், தீர்த்தங்கரர் பாடல்களாக - சிரமண சமயத்தவர் போற்றிப் பாடல்களாக - இருக்கின்றன. ஔவைக் குரத்தி போற்றும் ஆத்திசூடியைக் குறிப்பிடும் பாடல் ஒன்றும் இருக்கிறது. குருமூர்த்திகளாய் சிரமண சமயப் போதனர்களைப் போற்றிப் பாடல்கள் உள்ள வீரசோழியத்தின் பழைய மேற்கோள் – ஆத்திசூடி தீர்த்தங்கரர் பற்றியதாகும்.*

*தாதகி மலர் சூடியை நேர்*
*போதனர் புகழே புயலே*
*மீதெழு நிலவே வெயிலே*
*ஆதரவு அகலாள் இவளே*

*சோழ மன்னனின் தாதகி மலரைப் பாடும் பாடலும் வீரசோழியத்தில் அகப்பாடலாக உள்ளது. துவாரகையில் இருந்து வேளிர்குடிகள் தமிழகம் போந்து இரும்பு தொழில்நுட்பமும், குதிரைகளும், நெல் வேளாண்மையும் கொண்டுவந்தமை தொல்லியல் ஆராய்ச்சிகள் காட்டுகின்றன. அப்போது சிந்து சமவெளியின் மகரவிடங்கர் (தை) – கொற்றவை (தையல்) வழிபாடு பானை ஓடுகளிலும், பாண்டியர் சேரர் காசுகளிலும், கல்லில் இரும்பு உளிகொண்டு செய்த தென்னிந்தியாவின் முதல் பெரும் சிற்பங்களாகவும் (மோட்டூர், உடையாநத்தம்) கிடைக்கின்றன [1]. வேளாண்கடவுளாக பலராமனும் தமிழகத்தை வந்தடைந்தார். அப்போது பலராமனின் பனைக் கொடி சேரர்க்கும், தீர்த்தங்கரரின் ஞான விருட்சம் ஆத்தி சோழர்க்கும், அம்மனின் வேப்ப மரம் பாண்டியர்க்கும் குலவிருட்சங்கள் ஆகியுள்ளன. பார்சுவநாதர் போலவே பலராமனுக்கும் நாகக்குடை உண்டு. வீரசோழியத்தின் பழைய மேற்கோட் பாடல்களைப் பார்க்கும்போது சமணமுனிவர்கள் சோழர்களுக்கு ராஜகுருக்களாக விளங்கியிருப்பது தெரிகிறது. ஆத்திசூடியை வழிபட்ட சமண முனிவர்கள் சங்க காலத்தில் சோழர்களை ஆத்தியைக் குலச் சின்னமாக மேற்கொள்ளச் செய்திருக்கலாம். இது கி.மு. 3-ஆம் நூற்றாண்டளவில் நிகழ்ச்சி. ஐராவதம் மகாதேவன் 2003-ல் எழுதிய சங்ககாலத் தமிழ்க் கல்வெட்டுக்கள் என்னும் பாரியநூலில் சங்க காலச் சமணத்தின் மேன்மை அறியலாகும்.*

*ஆத்தி (bauhinia racemosa) மரம் தான் தாதகி (dhaataki) என்று தெளிவாகத் தெரிவிப்பது தமிழ் இலக்கியங்களே. சோழரின் குலமரமாக அமைந்ததால் பல நூற்றாண்டுகளாய் இத் தெளிவு சாத்தியமானது. முதன்முதலில் தாதகி என்ற சொல் மணிமேகலையின் லோகாயத வாதத்தில் வருகிறது. செயங்கொண்டார் சோழரின் ஆத்திதான் தாதகி என்று காராணை விழுப்பரையன் வளமடலில் கூறுகிறார். அதற்கும் முன்னரே நிகண்டுகளில். வடஇந்தியாவில் தாதகி என்றால் என்ன மரம் என்ற அறிவு மங்கியிருக்கிறது. தாதகி என்றால் மாமரம், தாதிரி (dhaatiri) என்னும் வேலம்புதை (grislea tomentosa), ஆலமரம் (ஆதிநாதர் என்னும் ரிஷபநாதர்-சிவன் மரம்) என்றெல்லாம் 19-ஆம் நூற்றாண்டில் அறிஞர்கள் எழுதியுள்ளனர். தாதகி (= ஆத்தி) மர வேறுபாடுகள் காலப்போக்கில் பத்மபாணியின் கைத் தாமரை ஜோதி, சுடர் என்றெல்லாம் ஆவதுபோல் என்க. தாதகி/ஆத்தி மரத்தின் அரும்புகள் போலவே, தாதிரி முள்புதரின் சிவந்த புஷ்பங்களும் மது உற்பத்தியில் பயனாகியிருக்கிறது. தாதிரி இலைகளும், மாவிலைகளும் பார்ப்பதற்கு ஒன்றுபோல் இருப்பவை. ஆத்தி/தாதகி மர நிழலில் தீர்த்தங்கரர் அமர்ந்து தவம்செய்யலாம். ஆனால் ஓர் ஆள் உயரமே வளரும் தாதிரி முள்ளம்புதையில் ஒரு மனிதன் நிற்பதோ, அமர்வதோ கடினம். எனவே, தாதிரியைத் தாதகி எனும் அண்மைக்கால நூல்களின் பிழை திருத்தப்படல் வேண்டும்.*

*சைவத்துக்கும், சிரமண சமயங்களுக்கும் நிறைய ஊடாடல் நிகழ்ந்துள்ளது. இதனைச் சைவ ஆகமங்கள் காட்டுகின்றன. காலத்தால் பழைய நாயனார் சண்டீசரே. யமுனை ஆற்றங்கரையின் வடமதுரைச் சிற்பம் ஒன்றில் கி.பி. நான்காம் நூற்றாண்டிலேயே சண்டீசர் புராணம் சித்தரிக்கப்பட்டுள்ளது. அவர் ஆத்தி மர நீழலில் மணலால் சிவலிங்கம் செய்து வழிபட்டார் என்று சம்பந்தர் தேவாரத்தில் பாடுகிறார். இதுவே சிவலிங்க வழிபாடு பற்றித் தமிழ் இலக்கியத்தில் வரும் முதற்குறிப்பு ஆகும். அதற்கு முன் கிடைக்கும் குடிமல்லம் லிங்கம் மீன்/மகர யக்ஷன் மீது நிற்கும் வருணன்/விடங்கராகக் கையில் மீன்குத்தும் ஈட்டி வைத்துக்கொண்டு இருக்கிறார். தொல்காப்பியத்தில் சிவனுக்குத் தனித் திணை இல்லை, ஆனால் வருணனுக்கு உண்டு என்பதும் பாண்டியர் சங்ககாலக் காசுகளில் யாகங்கள் மகரவிடங்கருக்குச் வேட்டதும் முற்காலத் தமிழர் சமய வரலாற்றைக் காட்டுகின்றன. பல்லவர் காலத்தில் நிகழ்ந்த சிவ மகாதேவர் கடவுளாக்கத்தில் ஒரே இடத்தில் சாதாரணமாக எங்கும் இருக்கும் ஆத்தி/தாதகி ஆகிய தீர்த்தங்கரர் மரத்தை எடுத்துக்கொண்டு தமிழில் முதன்முதலாய் சிவலிங்கம் தோன்றுவது சிறப்பு. புரட்சி என்றே பகரலாம். இருப்பினும், சிவன் மேனியில்*

*ஆத்தி சூடலைத் தேவாரம், ஆகமங்கள் தவிர்த்துவிடுகின்றன. மகாவீரரின் வர்த்தமானர் என்ற பெயரும் சிவனுக்கு ஒரே ஓர் இடத்தில் தேவாரம் எடுத்தாள்வதுடன், சம்பந்தர் தீர்த்தங்கரர் மரமான ஆத்தியின் கீழ் சிவலிங்கம் மணலில் சண்டீசர் செய்ததாகப் பாடுவது ஒப்பிடத்தக்கது. சண்டீசர் பார்சுவநாதருக்கு 8 அல்லது 9 நூற்றாண்டுகள் பின் பிறந்தவர்.*

*புத்தர் ஒளிக்கம்பமாக நிற்கும் காந்தாரச் சிற்பக்கலையை உள்வாங்கிப் பல்லவர்காலத்தில் மாலும், அயனும் தேடும் லிங்கோத்பவராக வடிக்கும் மரபு ஏற்படுகிறது. அணங்கு என்ற சங்கச் சமயச் சொல்லுக்கு வருத்தும் கடவுள் எனப் பொருள். காமனுக்கு அணங்கன் என்ற பெயரைச் சீவக சிந்தாமணியில் இருந்து ஜி.யு. போப் காட்டுகிறார். அணங்கன் அனங்கன் எனத் திரிந்து சிவன் விழியால் எரியுண்டான் என்னும் புதுக்கதை உருவாகிறது. போதி மரத்தடியில் புத்தரை மாரவேள் அம்பால் எய்யும் சிற்பங்களை வைத்து அனங்கன் என்ற புதுப்புராணம் பிறந்துள்ளது. அங்கம் என்றால் உடல் உறுப்பு. அனங்கன் – உறுப்பிலி. முழு உடலும் எரிந்தது என்றால் அவனுக்கு அசரீரன் என்றல்லவோ பெயர் இருக்கும்? இந்த பௌத்த –சைவ ஊடாடல் போலவே சமண –சைவ ஊடாடலும் உண்டு. சம்பந்தர் ஏன் சிவலிங்க வழிபாட்டை அறிமுகப்படுத்துகையில் தீர்த்தங்கரர் மரமான ஆத்தியைக் கைக்கொள்கிறார் என்று பார்த்தோம். யமுனை கங்கை நதிகளுக்கிடையே இருந்த நிலம் நாவலந்தீவு. அதற்கும் அப்பால் தாதகி லோகம், அதற்கும் அப்பால் ஆம்பல் (புஷ்கர) லோகம் என்று சமண இலக்கியங்கள் சொல்ல ஹிந்து சமய நூல்கள் 7 தீவாக பால், தயிர், நெய்க் கடல்கள் என்றெல்லாம் விரிக்கின்றன. பார்சுவ தீர்த்தங்கரர் தவமிருந்த ஆத்திமரத்தைச் சமணர்கள் தேவதாரு என்று புகழவே, இமயமலையில் உள்ள சிவனுக்கு தேவதாரு (Himalayan cedar) வனத்தில் சிவன் அம்மணமாக (< சமணம்) திரிந்தபோது தாருகாவன ரிஷிபத்தினியர் காமவலைப் பட்டதாகப் சைவ புராணம் பாடினர். சமணத்தில் தேவதாரு தாதகி என்னும் ஆத்தி மரம். ஆனால், சைவத்திலோ தேவதாரு இமயமலையின் 'பைன்' சாதி மரங்கள்!*

## சிவனார் திருமேனியில் ஆத்தி மலர் - கி.பி. 12-ஆம் நூற்றாண்டிலிருந்து ஏற்பட்ட மாற்றம்:

*கி.பி. முதலாயிரம் ஆண்டுகள் முடியும்வரை ஆத்தி மலரைச் சிவபெருமான் சூடுவதாக தேவாரம், திருவாசகம் போன்ற திருமுறைகளிலோ, சைவ ஆகமங்களிலோ கிடைக்கவில்லை. அஷ்டபுஷ்பங்கள் என்று சிவனுக்குச் சிறப்பித்துச் சொல்லப்படும் எட்டுப் பூக்களிலும் ஆத்திப்பூ இடம்பெறவில்லை. இத்தனைக்கும் ஆத்தி சாதாரணமாக எங்கும் கிடைக்கும் மலர். எல்லா இடத்திலும் இருக்கும் மரம் ஆத்திமரம். பல கோவில்களின் அருகே உள்ள மரம்தான் என்றாலும் ஆத்தியைச் சிவபிரான் திருமேனியில் தேவாரம், சைவ ஆகமங்களில் ஏன் சூட்டுவதில்லை என்று நோக்குதல் அவசியம். சாதாரணமான ஒரு பூஞ்சோலை (Orchid tree) மரமான ஆத்தி சிவபிரான் திருமேனிக்கு விலக்காக (taboo) கொண்டுள்ளது ஏன் என ஆராயுங்கால் சமண தீர்த்தங்கரருக்கு விசேடமான ஞானவிருட்சம் என்பதால் எனக் கருதலாம். சைவமும், சமணமும் மோதிய நூற்றாண்டுகள் கி.பி. ஆறிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டுவரை ஆகும். அதனால்தான் சைவ நூல்கள் பார்சுவநாதர்க்கான ஆத்திமலரையும், மகாவீரர்க்கான அசோக மலரையும் சிவபிரான் திருமேனியில் சூடுவதாக விசேடித்துச் சொல்லவில்லை. ஆனால், ஏறத்தாழ 2000+ ஆண்டுகளாக பார்சுவநாதரை ஆத்தி மரம் கவிந்திருக்க அமர்ந்த சிற்பங்களைக் கண்டோம். பக்தி இயக்கத்தால் சமணம் அனேகமாக அழிந்த பின் சில நூற்றாண்டுகள் சென்றபின்னர் இந்த நிலையில் இருந்து மாற்றம் வருவதையும் ஒட்டக்கூத்தர் தொடங்கிப் பார்க்கலாம்.*

*சோழப் பேரரசர்கள் மூவர் காலத்தில் வாழ்ந்தவர் ஒட்டக்கூத்தர். செயங்கொண்டாருக்குப் பிறகு இவரே கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டம் பெற்றவர். கூத்தர் எழுதிய தக்கயாகப்பரணி முக்கியமான சைவத் தமிழ் இலக்கியம். பொதிகை மலையில் நடுவே பாண்டியர்களின் குலகுரு அகத்தியர் வீற்றிருக்க வலப்புறம் முருகனும், முருகனின் அவதாரமாக சம்பந்தரும் இருப்பதாகவும், பொதிய முனிக்கு இடப்புறத்தில் பத்மபாணி அவலோகிதரும், அவர் அவதாரமாக தட்சிணாமூர்த்தியும் இருப்பதைப் பாடியுள்ளார் [2].*

முத்துப்பந் தரில்நிற்கும் குருளைக்கும் சினவேல்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்கும் சடிலக்குந் தளருக்கும் அல்லாற்
கூழைத்தண் டமிழறக்கேன் கொடியுங் காளமுமே!

*சைவம் – பௌத்தம் தொடர்பு கூறும் இச் சிறந்த பாடல் போலவே, முருகன் திரு அவதாரம் எடுத்து எண்ணாயிரம் சமணர்களைக் கழுவேற்றியதை சிறந்த வீரச் செயலாக ஒட்டக்கூத்தர் பரணியில் பாடியுள்ளார். அதுவரை சமணத் தீர்த்தங்கரருக்கு உரிமைப்பட்டிருந்த ஆத்தி மலரை எடுத்துச் சிவபெருமான் சூடியிருப்பதாக முதன்முதலில் தெள்ளத் தெளிவாகச் சொல்வது ஒட்டக்கூத்தர் தான். அவரது பாதையில் முருகனின் அவதாரமாக சம்பந்தர் பிறந்து கழுவேற்றியதையும், சிவபிரான் ஆத்தி சூடுவதையும் அருணகிரிநாதர் பதினான்காம் நூற்றாண்டில் திருப்புகழ்ப் பாடல்கள் பலவற்றில் விரித்துப் பாடுகிறார். கால வரிசைப் படி தமிழ் இலக்கியங்களை வைத்துப் பார்த்து, அத்துடன் சிவன் திருமேனியில் உள்ள மலர்கள், பார்சுவநாதர் புராணம், இந்தியக் கலைவரலாற்றில் தீர்த்தங்கரர் பற்றிய சிலைகளும், ஓவியங்களும் ஆத்தி கவிகையாய் உள்ள பார்சுவர் எல்லாம் ஆராயும்போது தமிழகத்தில் "பள்ளிக்" கல்வி தொடங்கி வைத்த ஆத்திசூடி நூலின் கடவுள் தீர்த்தங்கரர் என்பது தெரிகிறது. ஆத்திசூடியின் வழிநூலாகப் பிற்காலத்தில் தோன்றிய கொன்றைவேந்தனில் சிவனுக்கு அதிசிறப்பு வாய்ந்த கொன்றை மலர் சூடும் வேந்தன் சிவனார் மகன் வினாயகர் வணக்கம் பாடப்படுகிறது:*

கொன்றை வேந்தன் செல்வன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே.

*தமிழ்நாட்டில் சமணம் கூட இன்றும் ஓரளவு உயிர்வைத்திருக்கிறது. ஆனால், முற்றிலும் அழிந்துபோன சமயம் பௌத்தம். கொங்குநாடு தந்த அறிஞர் அயோத்திதாச பண்டிதர் தமிழ் பௌத்தத்துக்கு மேலைநாட்டு அறிஞர்கள் தொடர்பால் மீண்டும் உயிரூட்டினார். சிலம்பு, மணிமேகலை, குறள், நாலடி போன்ற சமண, பௌத்த சமயங்கள் தந்த இலக்கியங்கள் பிறந்த நூற்றாண்டுகளில் அச் சமயங்கள் உயர்நிலையில் இருந்தன. அப்போதுதான் பாலபாடமாக ஆத்திசூடி, நெல்லிலக்கம், கணக்கதிகாரம் தோன்றியுள்ளன. ஏனெனில் அச் சமயங்கள் பக்தி இலக்கிய இயக்க வெற்றியால் பின்னர் எண்ணிக்கையில் தாழ்ந்துபோன போது சிறுவர்கள் எல்லோரும் பள்ளியில் படிக்கும் நூல்களில் சமணக் கடவுளருக்குக் கடவுள் வாழ்த்து தோன்றாது அன்றோ? அரசு, ஆசிரியர்கள் ஆதரவும் தாழ்ச்சியுற்ற சமயங்களுக்கு கிடைக்காது.*

*ஆத்திசூடி போன்றவற்றின் கடவுள் வாழ்த்தின் பொருள் இன்று அனேகமாக மறைந்துபோனது. குண்டலகேசி, வளையாபதி, கொங்குவேள் செய்த பெருங்கதையின் கிடைக்காத பகுதிகள் என்று ஏராளமான சமண நூல்கள் அழிந்துபோயின. அவை மறைந்துபோனதால் தமிழ் பெற்ற இழப்புகள் அதிகம். விஞ்ஞான நோக்குடன் வாழ்க்கையைப் பார்க்கும் மரபு தமிழில் அருகிப் போயிற்று. ஐரோப்பிய மறுமலர்ச்சி போன்ற அறிவியக்கங்கள் இந்தியாவின் மாநிலங்களில் தோன்றாமைக்கு பௌத்த, சமண சமயங்களின் வீழ்ச்சி ஒரு பெரிய காரணம். அறிவார்ந்த பகுத்தாராயும் சம்வாதங்கள் நிகழ்வது நின்றுபோனது. அயல்நாட்டார் ஆட்சியில் அதற்கெல்லாம் ஆதரவில்லாது ஒழிந்தது. பிராகிருதம், பாலி, சமற்கிருதம் போன்ற மொழிகளில் உள்ள சமண சமயங்களின் நூல்களைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டும். போதி மரம் கவிகையாய்ச் சூழும் புத்தர் பெருமானுக்கு ஆத்திசூடி மற்றும் கொன்றைவேந்தன் வழியில் கடவுள் வாழ்த்து ஒன்று புனைந்துள்ளேன். அதனைப் பாடி இக்கட்டுரையை நிறைவு செய்வோம்.*

போதி சூடி அமர்ந்த தேவனை
*ஆதியென் றேத்தித் தொழுவோம் யாமே!*

## ஆய்வுத் துணைகள்:


*(1) சங்ககாலப் பாண்டியர் நாணயங்களில் மகரவிடங்கர், (ஓம்சக்தி தீபாவளி மலர், 2013)*
*http://www.vallamai.com/?p=49442*

*(2) பௌத்த மதத்தின் பத்மபாணியும், தட்சிணாமூர்த்தி உருவாக்கமும்:*
*http://poetryinstone.in/wp-content/uploads/2009/01/padmakottar.pdf*

*(3) சமண மதத்தவர்கள் செய்த தமிழ் இலக்கியங்கள்:*
*http://www.tamiljains.org/contribution-of-jain-authors-to-tamil-literature*

***(4)** Photo credits of Parsvanatha: American Institute of Indian Studies, Varanasi, India*